# ஸ்ரீராமாநுஜன் - 1

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்







ஆழ்வார் எம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

**ஆழ்வார்கள்வாழி அருளிச்செயல்வாழி***
**தாழ்வாதுமில்குரவர்தாம்வாழி*—ஏழ்பாரு**
**முய்ய அவர்களுரைத்தவைகள் தாம்வாழி***
**செய்யமறை தன்னுடனே சேர்ந்து**


| ஸம்புடம் 1 | அக்ஷய ஞு சித்திரை மீ | ஸஞ்சிகை 1 |
|---|---|---|


## ஆரம்ப விஜ்ஞாபனம்

ஒவ்வொரு வகுப்பினரும் முன்னேற்றமடைய விருப்புங்காலமாயிருக்கின்றது இக்காலம். அவரவர்கள் பல வழிகளிலும் தத்தம் கொள்கைகளைப் பரவச்செய்து தங்கள் சமயத்தை மேன்மைபெறுத்திக் கொள்ள முயல்கின்றனர். உதாரகுணம் வாய்ந்த மஹான்கள் எந்த மதத்திலும் வெறுப்புக் கொள்ளமல் எல்லா மதமும் எம்பெருமானுக்கியவையே என்று கொண்டு உவந்தேயிருப்பார்கள். ஆனுலும் தமது மதத்தின் பெருமேன்மையை உண்மையாகவுணர்ந்து அதில் அபிமானம் கொண்டிருப்பதன் பயனுக ஸ்வமதஸ்தாபனத்தோடுகூட இதரமத கண்டனமும் சில மஹான்களுக்கு ப்ராப்தமாகின்றது. விளக்கை ஏற்றி வைத்தால் இருள் தானே அகன்று போவதுபோல மேன்மை தங்கிய மதத்தின் தத்துவங்களை வெளியிடவே இதர மதங்கள் தானே தலைமடியுமென நினைத்துப் பரமத கண்டனங்களில் சிறிதும் கருத்தூன்ருதேயிருப்பாருமுளர். இதுவே தற்காலம் கைப்பற்ற வேண்டிய முறை.



காலத்தின் போக்கு வரவர விபரீதமாயிருத்தலால் ஆஸ்திகர்களுக்குள் வைதிகர்களுக்குள் பரஸ்பரஹிதைஷிபாவமும் ஐகமத்யமும் அவச்யம் வளரவேண்டும். இல்லையேல் நமது வைதிகமதம் வெகு சீக்கிரத்திலேயே இருக்குமிடம் தெரியாமலொளிந்துவிடும். ஆஸ்திகர்களென்றும் வைதிகர்களென்றும் சொல்லக்கூடிய வகுப்பினர் இந்நிலவுலகில் மிகக் குறைந்த எண்ணில் உள்ளார்கள். சிலர் பேருக்கு மாத்திரம் ஆஸ்திகர்களாகவும் வைதிகர்களாகவும் தம்மை வெளியிட்டுக் கொள்வார்கள். ஆனால் செயல்கள் வெவ்வேறாயிருக்கும் இருந்தாலும், ஆஸ்திக வைதிக மதத்தைத் தழுவுவதாக வெளியில் சொல்லிக்கொள்வதற்கு மாத்திரமாவது நாம் உகக்க வேண்டியது அவச்யமே. ''பொய்யேகைம்மை சொல்லிப் புறமே புறமேயாடி மெய்யே பெற்றொழிந்தேன்'' என்ற நம்மாழ்வார் அருளிச் செயலின்படி புறனுரைக்குப் பேறுதப்பாதென்பது திண்ணம்.

ஆஸ்திகத்வமும் வைதிகத்வமும் வேரூன்றி நிற்பதற்கு இன்றியமையாத சாதனங்கள் நம் முன்னோர்கள் திருவாய்மலர்ந்தருளிய பலவகையான நூல்களையும் பரவச் செய்வதேயாம்.

பிறவிக்கடலுள் நின்று துளங்கும் நாம் உய்வதற்காக நமது முன்னோர்கள் அளவு கடந்த கருணையுடன் நித்யாநுஸந்தேயமாக அருளிச் செய்துள்ள திவ்யக்ரந்தங்களுக்கெல்லாம் எளிய தெளிய வுரையை வெளியிடுவதே சிலகாலம் வரையில் இப்பத்திரிகைக்கு முக்யமான நோக்கமாக இருக்கின்றது. ஸமயோசிதங்களான வ்யாஸங்களும் சிலசில வெளிவரக் கூடும்.

ஸ்ரீஸ்வாமி (கையொப்பம்)

(1948-ல் ஸ்ரீஸ்வாமி ஸ்ரீராமாநுஜன் பத்ரிகையை ஆரம்பித்தபோது முதல் இதழில் எழுதியருளியது)

---


## ஸ்ரீராமாநுஜன் சந்தா விவரம்

ஆயுள்சந்தா ரூ 250
வருடச்சந்தா ரூ 16

(சந்தாவை 7, தெற்கு மாடவீதி திருவல்லிக்கேணி, சென்னை-600 005. என்ற விலாசத்திற்கு அனுப்பவும்)

# கீதாசார்யனும் ஸ்ரீராமாநுஜனும்

இப்பத்திரிகை ஸ்ரீ ராமாநுஜன் திருநாமம் பூண்டிருப்பதனால் ஒவ்வோரிதழிலும் தலையான விபாஸம் ஸ்ரீ ராமாநுஜரைப்பற்றியே அமையவேண்டுமென்பது எமது நோக்கம். உலகுக்கு ஒருயிரான அப்பேராசிரியருடைய திருக்குணங்களைப் பற்றியோ திவ்ய சரிதையைப் பற்றியோ, அவரது ஸ்ரீஸூக்திகளிலுள்ள விசேஷங்களைப்பற்றியோ ஏதேனுமொருவகையில் அவருடைய ஸம்பந்தமான வியாஸம் முகப்பில் அமைந்து தீரும். ஸ்ரீ ராமாநுஜத் திருநாமத்தின் பொருள் விசேஷங்களைப்பற்றி இங்கு அநுபவிக்க விரும்புகின்றோம்.

இவ்வாசிரியர்க்கு இந்த திருநாமம் எதனால் இடப்பட்டதென்று ஆராயுமளவில், முன்னோர்களுடைய நூல்களிலிருந்து இங்ஙனே அறியலாகிறது;—ஸ்ரீ ராமாநுஜனென்னுஞ் சொல் ஸ்ரீராமபிரானுடைய தம்பி யென்னும் பொருள் கொண்டது. தசரதாத்மஜனை இராமபிரானுக்கு இளையோனாக அவதரித்த லக்ஷ்மணன் என்றபடி. அவன் இடைவீடின்றிக் கைங்கரியமே போதுபோக்காக இருந்தது போல ஸ்வாமி உடையவரும் கைங்கரியத்தையே பெருஞ் செல்வமாகக் கொண்டிருக்கப் போகிறாரென்பதை அவதார ஸமயத்திலேயே யோகத்ருஷ்டியினாலறிந்தவரும் இவர் தமக்கு மாதுலருமான திருமலைநம்பியென்னுமாசிரியர் இவர்க்கு இராமாநுசனென்று நாமகரணஞ் செய்தருளினர்—என்பதாக.

ஸ்ரீராமபிரான் கைகேயியின் வரப்ராத்தனையை நிறைவேற்றும் வியாஜமாகக் கானகஞ் செல்லப் புறப்படும்போது இளையோனான இலக்குமணன் தானும் நிர்ப்பந்தித்துத் தன்னையும் உடனழைத்துச் செல்லும்படி வேண்டினன். தானும் காட்டுக்கு வர விரும்பியது எதற்காக வென்னில்; *பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரி ஸாநுஷு* ரம்ஸ்யதே, அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரதஸ் ஸ்வபதச் ச தே* என்பது அப்போது இளைய பெருமாளுடைய வார்த்தையாக ஸ்ரீ ராமாயணத்தில் உலகறிய நிற்கும் ச்லோகம் ''தேவரீர் பிராட்டியோடுகூட சித்திரகூடத் தாழ்வரை முதலானவிடங்களில் இன்புறும்போது அடியேன் ஒழிவில்காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலாவடிமைகள் செய்யப்போகிறேன்'' என்பது மேலே குறித்த ச்லோகத்தின் கருத்து. அப்படியே அவ்விளையோன் தன்னுடைய வாழ்நாள் முழுவதையும் அடிமையெனும் அத்தாணிச் சேவகஞ் செய்தே கழித்தனன். அதுபோலவே ஸ்வாமி உடையவரும் தம் வாழ்நாள் முழுவதையும் தொண்டுபூண்டமுதமுண்டே கழித்தருளினரென்பது அவரது திவ்விய சரிதையினால் மிகப் பிரசித்திபெற்ற விஷயம். தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்திவைத்ததும் மாறனுரைசெய்த தமிழ்மறை வளர்த்ததும் முதலானவை ஒப்புயர்வற்ற கைங்கரியங்களன்றோ. ஆக இக்காரணம் பற்றியே ஸ்வாமிக்கு ராமாநுஜனென்னுந் திருநாமமிடப்பட்டதென்பது மிகப் பொருத்தம். **லக்ஷ்மண முநி** யென்றும் **இளையாழ்வா** ரென்றும் வழங்குகின்ற இவரது திருநாமங்களும் இதனை வற்புறுத்தி நிற்கும்.

இனி, ராமாநுஜனென்ற திருநாமம் லக்ஷ்மணனுக்குப்போலவே கீதாசார்யனான கண்ணபிரானுக்கும் பொருந்தியதே. 'பலராமனுடைய தம்பி' என்னுங் காரணத்தினால் கண்ணபிரானை ராமாநுஜனென்னக் குறையில்லையன்றோ. ஆனது பற்றியே **முகுந்தமாலை** யென்னும் உலகமறிந்தஸ்தோத்தரத்தில் ''**ஹே ராமாநுஜ ஹே ஜகத்த்ரய குரோ! ஹே புண்டரீகாக்ஷ மாம் ஹே கோபீஜநநாத பாலய**'' என்று ராமாநுஜனென்ற திருநாமத்தினாலேயே கண்ணபிரான் அழைக்கப்பட்டுள்ளான். ஆகவே கண்ணபிரானுடையதான அந்தத் திருநாமமே ஸ்வாமி

உடையவர்க்குச் சாத்தப்பட்டதென்று கொள்ளுகிற ஸம்பிரதாயமும் ஒன்றுண்டு. ஸ்ரீ நிகமாந்த தேசிகன் பணித்த யதிராஜ ஸப்ததியில் "**சமீதோதய சங்கராதிகர்வ : ஸ்வபலாத் உத்ருத யாதவப்ரகாச :, அவரோபிதவாந் ச்ருதேரபார்த்தாந் நநு ராமாவரஜஸ் ஸ ஏஷ பூய :**" என்ற ச்லோகம் இதற்கு ஆதாரமாக அவதரித்தாகும். இதன் கருத்து விவரிக்கப்படுகிறது.

1. **சமீதோதய சங்கராதி கர்வ :**—இது கண்ணனுக்கும், உடையவர்க்கும் பொதுவான விசேஷணம். சங்கரன் முதலானாருடைய செருக்கை அடக்கினவர் என்பது பொருள். கண்ண பிரான்பரமாகப் பொருள் கொள்ளும்போது சங்கரன் என்பதற்குச் சிவபிரானென்று அர்த்தம். ஆதி பதத்தினால் அப்பிரானைச் சேர்ந்த கார்த்திகையான் கரிமுகத்தான் முதலானாரை [ஸுப்ரஹ்மண்ய விநாயகாதிகளை]க் கொள்வது. கண்ணபிரான் பாணாஸுர யுத்தத்தில் சங்கரன் முதலானாருடைய செருக்கை அடக்கினது இதிஹாஸ புராண ப்ரஸித்தம். உடையவர் *சங்கர பாக்கர யாதவ பாட்ட ப்ரபாகர் தங்கள் மதஞ்சாய்வுற* என்றும் *கா சங்கா சங்கராதே :* என்றும் சொல்லுகிறபடியே சங்கர குருப்ரப்ருதிகளான பிற மதத்தவர்களின் செருக்கைப் போக்கினவர் என்பது சரித்ர ப்ரஸித்தம். ஆகவே இந்த விசேஷணம் கண்ணனுக்கும் உடையவர்க்கும் ஸாம்யத்தை நிரூபித்ததாயிற்று.

எம்பெருமானார் சங்காதி கர்வசமநம் பண்ணினது ஸ்ரீ பாஷ்யாதிக்ரந்த ரசனையினாலும் அத்வைதி ப்ரப்ருதிகளை வாதப் போரில் வென்று ஆட்படுத்திக் கொண்டதனாலுமென்றுணர்க. இவ்விஷயம் மேலே மூன்றாவது பாதத்தின் விவரணத்தினாலும் விளங்கும்.

2. **ஸ்வபலாத் உத்த்ருதயாதவப்ரகாச:**—கண்ணபிரான்பரமான அர்த்தத்தில் யாதவர்களின் பிரகாசம் யயாதி சாபத்தினால் மங்கிக் கிடக்கையில், "கோபாலோ யாதவம் வம்சம் மக்நமப்யுத்தரிஷ்யதி" என்கிறபடியே அந்த ப்ரகாசத்தைத் தனது வலிமையினால் புநருத்தாரணம் செய்தவன் என்று கொள்ளக் கடவது. யது குலத்திலே பிறந்து யாதவர்களை விளக்கமுறச் செய்தருளினவன் கண்ணபிரான் என்க. உடையவர்பரமான அர்த்தத்தில் 'யாதவ ப்ரகாச' என்று முழுச் சொல்லாகக் கொண்டு, அப்பெயர் பூண்ட மாயாவாதி குருவைத் தம்முடைய க்ருபாபலத்தினால் உத்தரிப்பித்தவர் என்று கொள்க. முதலில் தமக்கு உபாத்யாயராயிருந்த யாதவப்பிரகாசரையும் தமக்கு அடிமைப் படுத்திக் கொள்ளும் படியான ப்ரபாவமுடையவர் எம்பெருமானார் என்க. இவ்வரலாறு உடையவர் சரிதையில் விரிவாகக் காணத்தக்கது.

3. **அவரோபிதவாந் ச்ருதே : அபார்த்தாந்** — 'அபார்த்தாந்ச்ருதே: அவரோபிதவாந்' என்று அந்வயம். இதில் ஸபங்கச்லேஷமுள்ளது. **அபார்த்தாந்** என்னும் பதம் (அ-பார்த்தாந்) என்றும் (அப-அர்த்தாந்) என்றும் பிரியும். பார்த்தனென்று அர்ஜுநனைச் சொல்லி, பார்த்தனல்லாத [அர்ஜுந விரோதிகளான] துர்யோதநாதிகளை அபார்த்தர்களென்று சொல்லுவதாகக் கண்ணன்பரமான அர்த்தத்தில் கொள்ள வேண்டும். **ச்ருதி** யென்று கீர்த்திக்கும் பெயர், வேதத்திற்கும் பெயர். கண்ணபிரான் அபார்த்தர்களான துர்யோதநாதிகளைக் கீர்த்தியிலிருந்து கீழேயிறக்கி விட்டான்; பாண்டவ பக்ஷபாதியாயிருந்து மலை புரைதோள் மன்னவரும் மாரதரும் மற்றும் பலர் குலைய நூற்றுவரும் பட்டழியச் செய்து அவர்களைக் கீர்த்தியிழந்தவர்களாகச் செய்தானென்றபடி. ஸ்வாமி ராமாநுஜரோவென்னில்; [**ச்ருதே : அபார்த்தாந் அவரோபிதவாந்**] இதர மதஸ்தர்கள் வேதங்களுக்குச் செய்த அபார்த்தங்களை ஸமீசீநார்த்த ப்ரதர்சநத்தினால் நிரஸித்தருளினவர். ஆனது பற்றியே ***சமீதோதய சங்கராதி கர்வ** ராக முதல் பாதத்தில் கூறப்பட்டாரென்றுணர்க;

கண்ணபிரானுக்கும் உடையவர்க்கும் பல படிகளாலும் ஸாம்யமுண்டு. கண்ணபிரானாகத் தோன்றின பகவான் செய்த செயல்களும் ஸ்ரீராமாநுஜர் செய்தருளின செயல்களும் ஒத்திருக்கையாகிற ஒற்றுமைநயம் ஈண்டு நிரூபிக்கப்படுகிறது. மேலே யெடுத்துக் காட்டிய

**சமிதோதய சங்கராதிகர்வ :** இத்யாதியான யதிராஜஸப்ததிச்லோக ரத்னத்தில் கண்ண னுக்கும் உடையவர்க்கும் ஸாம்யம் சிலேடையினுல் நிர்வஹிக்கப்பட்டுள்ளது: அது வட மொழிக்கடலில் ஆழ்ந்தவர்கட்கே ரஸிக்கக்கூடியது. இங்கு நாம் நிரூபிக்கும் ஒற்றுமை சரித்திரப்போக்கில் ஸம்பந்தப்பட்டதாகும். கேண்மின் :—

1. கண்ணபிரான் திருவவதாரஞ் செய்த இடம் சிறைக்கூடம் என்பது உலகமறிந்தது. ஸ்ரீராமாநுஜர் அவதரித்த இடமும் சிறைக்கூடமே. எப்படியெனில்; *அமரரோடு உயர்விற் சென்று அறுவர் தம் பிறவி யஞ்சிறையே* [திருவாய்மொழி 1-3-11] என்ற நம்மாழ்வார் திரு வாக்கின்படி இந்த ஸம்ஸார மண்டலமே ஒரு சிறைக்கூடமன்றே. இஃது *இருள்தருமா ஞாலமாதலால் இருள் மலிந்த விடத்தே வந்து பிறந்தார் ஆசாரியர், கண்ணனும் *இருள் நாள் பிறந்த வம்மான்* என்ற திருமங்கையாழ்வார் பாசுரத்தின்படியும் *வேண்டித் தேவரி ரக்க வீங்கிருள்வாய் வந்து பிறந்ததும்* என்ற நம்மாழ்வார் பாசுரத்தின்படியும் இருள் மலிந்தபோழ்தன்றே பிறந்தது.

2. கண்ணபிரான் அவதரித்தபோது *ஜாதோஸி தேவதேவேச! சங்கசக்ரகதாதர!* என்கிறபடியே சங்கொடு சக்கரமேந்துந் தடக்கையனுகவே சுடர் விளக்கத்தோடு திருவவதரித் தான். ஆசாரியர் அவதரிக்கும்போதும் நம் போலியரைப்போலே அழுதல் அரற்றுதல் செய் யாதே மிக்க ஞான வெள்ளச்சுடர் விளக்கத்தையே காட்டிக்கொண்டு அனைவரும் வியப்புறு மாறு அவதரித்தார். கண்ணபிரான் பிறந்தவிடம் ஒன்று; இளமையில் வளர்ந்தவிடம் வேறொன்று; பிறகு வளர்ந்தவிடம் மற்றொன்று. (அதாவது) வடமதுரையிலே பிறந்தது; திருவாய்ப்பாடியிலே இளமையில் வளர்ந்தது; பிறகு முதுமையில் த்வாரகை முதலான விடங் களில் வளர்ந்தது. ஆசாரியரும் பிறந்தது ஸ்ரீபெரும்பூதூரில்: இளமையில் வளர்ந்தது காஞ்சீ புரியில்: பிறகு வளர்ந்தது ஸ்ரீரங்கம், திருநாராயணபுரம் முதலானவிடங்களில் [மற்றொரு வகையுமுண்டு;] "திருமந்திரத்திலே பிறந்து த்வயத்திலே வளர்ந்து" என்கிற நம் முன்னோர் களின் முதுமொழியின்படியே திருவஷ்டாக்ஷர மஹா மந்திரத்தினுல் ஸ்வரூபவுணர்ச்சி பெறுதலாகிற பிறவியைப்பெற்று, த்வயம் என்கிற மந்த்ரத்தின் அநுஸந்தானத்தையும் அதன்படி அனுட்டானத்தையுமே செல்வ வாழ்ச்சியாகக் கொண்டிருப்பவரென்க. பிறக்கு மிடம் திருமந்த்ரம்; வளருமிடம் த்வயம்—ஆகையாலே இதனுல் கண்ணனோடு ஒப்புமை.

3. கண்ணபிரான் பிறந்த வயிற்றில் இவனொருவனே பிறக்கவில்லை; *மக்களறுவரைக் கல்லிடைமோத இழந்தவள் தன் வயிற்றில், சிக்கென வந்து பிறந்து நின்றாய்* [பெரியாழ்வார் திருமொழி 5-3-1] என்கிறபடியே மற்றும் பல மக்கள் பிறந்தாருண்டு; ஆனுல் அந்தப் பிள்ளை களினுல் உலகுக்கு யாதோருதவியும் நேர்ந்ததில்லை; அவர்கள் பிறந்ததும் இறந்ததுமே தெரிய வருகின்றது. இதுபோல, ஆசாரியர் திருவவதரித்த இவ்வுலகத்தில் மற்றும் பலபேர்களும் ஒக்கப்பிறக்கின்றார்களெனினும் அவர்களால் உலகுக்கொரு நன்மையுமில்லையாயிற்று. அவர்களின் பிறப்பும் இறப்புமேதான் உலகுக்குத் தெரியும்.

4. கண்ணபிரான் வடமதுரையில் நின்றும் திருவாய்ப்பாடிக்கு எழுந்தருளும்போது "வஸுதேவோவஹந் க்ருஷ்ணம் ஜாநுமாத்ரோதகோ யயௌ" என்னும்படி பேராழமான பெரு வெள்ளமும் முழந்தாளளவாக வற்றிப்போயிற்றென்று தெரியவருகிறது. அதுபோல, ஆசாரியர் சிறிது ஸஞ்சரிக்கத்தொடங்கும்போதே "பிறவியென்னுங் கடலும் வற்றிப் பெரும் பதமாகின்றதால்" என்ற பெரியாழ்வார் திருவாக்கின்படியே ஸம்ஸாரமாகிற பெருங் கடலும்வற்றத் தொடங்குமென்க.

5. பராத்பரனை பெருமான் தனது பெருமைகளையெல்லாம் மறைத்து அடக்கிக் கொண்டு நீறுபூத்த நெருப்புப்போலேயாகி இடக்கை வலக்கை யறியாத ஆயர்களோடே

கலந்து பழகினன்: அதுபோல ஆசாரியரும் மிகுஞானச் சிறு குழவியாய்த் தமது ஞான சக்திப் பெருமைகளையெல்லாம் மறைத்துக்கொண்டு அறிவிலா மனிசரோடே கலந்து பழகியிருந் தனர். கண்ணன் இடையர்களோடுமாத்திரம் கலந்து பழகியிருந்தானல்லன்; தன்னை வதைக்க வழிபார்த்திருந்த ஆஸுரப்ரக்ருதிகளோடும் கலந்திருந்து காலங் கழித்தனன். ஆசாரியரும் தம்மை மாய்க்கவெண்ணின யாதவப்ரகாசர்போல்வாரிடத்திலும் கலந்திருந்து காலங்கழித் ததுண்டே.

6. வளர்ந்தருளுமிடத்தில் தீயபுந்திக் கம்சனால் ஏவப்பட்ட பூதனை தாய்வேஷம் பூண்டுவந்து நஞ்சு திற்றிய முலையை உண்ணக் கொடுத்துக் கண்ணனைக் கொல்ல முயன்று தானே முடிந்துபோனாள். இந்தப் பூதனையின் வரலாற்றைப் பேசுகின்ற தேசிகர் யாதவாப் யுதயத்தில் *கம்ஸப்ரயுக்தா கில காபி மாயா* என்று மாயையென்கிற சொல்லால் கூறினர். மாயை யென்று மூலப்ரக்ருதிக்குப் பெயர். அது உண்மையில் விஷம்போன்றதாயிருக்கச் செய்தேயும் தன்னிடத்தில் போக்யதா புத்தியை யுண்டுபண்ணிக்கொண்டு தன் பக்கலிலே யீடுபடுத்தி நம்போல்வாரை முடிக்கப்பார்க்கிறது. இப்படியே ஆசாரியரையும் முடிக்கப் பார்க்கையில் அவரை முடிக்கமாட்டாமல் அவரது அளவற்ற பெருமையினால் தானே முடிந்து நிற்கிறது.

7. *கள்ளச் சகடங் கலக்கழியக் காலோச்சி* [திருப்பாவை—6] என்றபடி அஸுரா வேசம் பெற்ற வொரு சகடத்தைக் கண்ணன் திருவடிஸ்பர்சத்தால் நொறுக்கி முறித்து முடித்தனன் என்பது ப்ரஸித்தம். ஆசாரியரும் தமது திருவடி ஸ்பர்சத்தினால் சகடபங்கஞ் செய்தவரே. (எப்படியென்னில்) ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குக் கொண்டுபோகும் ஸாதனம் சகடமெனப்படுவது. இங்கிருந்து நாம் அப்பால் செல்லப் பல வழிகளுண்டு; நரகம் சுவர்க்கம் முதலானவற்றின் வழிகளிற் கொண்டு செல்லுவது கள்ளச் சகடமாகும்; ஆசாரியருடைய திருவடி ஸம்பந்தத்தினால் அது தொலைந்தொழிந்ததேயாம். அர்ச்சிராதி மார்க்கமாகிய நல்வழியிற் செல்லும் ஸாதனமே மேம்பட்டுத் தீயவழிகளிற் செல்லும் ஸாதனம் சிதைந்தொழியுமென்க.

8. கயிற்றினால் கட்டி ஒருரலிலே பிணித்துவிடப்பெற்ற கண்ணன் அவ்வுரலையு மிழுத்துக்கொண்டு தவழ்ந்து இரட்டை மருத மரங்களின் நடுவே யெழுந்தருளியபொழுது அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப்பட்டபடியினால் அந்த மரங்களிரண்டும் முறிந்து விழுந்தனவாக யமளார்ஜுனபங்க விருத்தாந்தமுள்ளது. இணைபிரியாதே நின்ற இரட்டை மருத மரங்கள்போல இணைபிரியாது நின்று நம்மை நலியுமவை பலவுண்டு. பகவத் கீதையில் நான்காவது அத்யாயத்தில் *த்வந்த்வாதீதோ விமத்ஸர:* என்றும், ஏழாவது அத்தியாயத்தில் த்வந்த்வமோஹேந பாரத என்றும், பதினைந்தாமத்யாயத்தில் *த்வந்த்வைர் விமுக்தா: ஸுகதுக்கஸம்ஜ்ஞை:* என்றும் இப்படி பலவிடங்களில் த்வந்த்வம் (இரட்டை) என்று பல சொல்லப்பட்டுள்ளன; இன்பு துன்பு, அஹங்கார மமகாரம், காமக்ரோதம், புண்ணியம் பாபம் — என்னு மிவையெல்லாம இரட்டைகளாம் இவையெல்லாம் ஆசாரியர் திருவடி ஸம்பந்தம் பெற்றவளவிலே இற்றொழிந்தனவென்க.

9. *வையமேழுங் கண்டாள் பிள்ளை வாயுளே* என்றும் *வாயுள் வையகங்கண்ட மட நல்லார்* என்றும் சொல்லுகிறபடியே கண்ணபிரான் தனது திருவாயில் ஏழுலகங் களையும் அன்பர்களுக்குக் காட்டினன். அதுபோல ஆசாரியரும் 1. ச்ருதிகள், 2. ஸ்மிருதிகள், 3. இதிஹாஸங்கள், 4 புராணங்கள், 5 பாஞ்சராத்ரங்கள், 6. ஆழ்வாரருளிச் செயல்கள், 7. ஆசார்ய திவ்யஸூக்திகள் ஆகிய ஏழையும் தமது திருவாக்கில் அன்பர்கட்குக் காட்டினர்.

10. யமுனையாற்றில் ஓர் மடுவில் இருந்துகொண்டு அம்மடு முழுவதையும் தன் விஷாக் னியினால் கொதிப்படைந்த நீருள்ளதாக்கிப் பெருங்கேடு விளைத்த காளியனென்னுங் கொடிய

நாகத்தைக் கண்ணபிரான் கொழுப்படக்கினன். இவ்வரலாற்றை யாதவாப்யுதய காவ்யத்தில் தேசிகர் கூறுமிடத்து (4-125) ஸ்ரீராமாநுஜர் செய்தருளின செயலையே உவமையாகக் காட்டியருளினர் ஐந்தலைவாய் நாகமாகிய காளியன் யமுனையாற்றைக் கலக்கிக் கெடுத்தது விஷவாக்குக்களான புறமதத்தவர்கள் மனம் போனபடியெல்லாம் கூறும் தவறான பொருள்களாலே வேதங்களைக் கெடுத்தபடியாம். அந்தக் கெடுதியைக் கண்ணபிரான் நீக்கி யமுனையை எல்லாரும் இனிமையாகப் பருகும்படி செய்தது – ஆசாரியர் தவறான பொருள்களை நீக்கி நல்ல பொருள்களை வெளியிட்டு வேதத்தை ஸத்துகளுக்கு உபஜீவ்யமாக ஆக்கினபடியாம். யமுனையின் ஸ்தானத்தில் வேதம்; காளியன் ஸ்தானத்தில் குதர்க்கவாதிகள்; கண்ணன் ஸ்தானத்தில் ஆசாரியர். *தூயபெருநீர் யமுனைத் துறைவனை* என்னும்படி யமுனையாறு இடையறாத பகவத் ஸம்பந்தத்தையுடையதாயிருந்ததுபோல வேதமும் பகவத் ஸம்பந்தத்தை நியதமாகவுடைத்தாயிருக்கும். காளியன் ஐந்து தலைகளாலும் நஞ்சை யுமிழ்ந்து நாசம் விளைவித்ததுபோல புறமதத்தவர்கள், ஐந்து விதமான துர்வாதங்களாலே நாசத்தை விளைவிக்கின்றனர்; (எப்படியென்னில்) 1. ஈச்வரனே யில்லையென்னுதல், 2. ஈச்வரன் உண்டெனினும் அவன் அனுமானத்தால் ஸித்திப்பவனேயன்றி சாஸ்த்ரத்தால் ஸித்திப்பவனல்லன் என்னுதல், 3. சாஸ்த்ரங்களைக் கொண்டே ஈச்வரனை யங்கீகரித்தும் அவனுக்குக் குணங்களும் விக்ரஹமும் இல்லையென்னுதல் 4. ஈச்வரன் ஒருவனே யென்பதில்லை, பல ஈச்வரர்கள் உண்டென்னுதல், 5. பிரபஞ்சமேயில்லை ஸர்வம் சூன்யம் எனல். ஆக இப்படிப்பட்ட ஐவகையான அபார்த்தங்களினால் புறமதத்தவர்கள் வேதங்களைக் கெடுக்க, அந்தக் கெடுதல்களை ஆசாரியர் போக்கியருளினர். காளியன் தலையிலே கண்ணபிரான் அடியிட்டு நடனம் புரிந்தாப்போலவே *நாவலிட்டுழிதருகின்றோம் நமன் தமர் தலைகள்மீதே* (திருமாலை -1) என்ற கணக்கிலே கூத்தாடப் பெறுதலுங்காண்க.

11. குதிரை வடிவங்கொண்டு மஹாபயங்கரனாக வந்த கேசி யென்னுமஸுரனைக் கண்ணபிரான் தொலைத்தருளினன்; அதுபோல நம் பேராசிரியர் *இந்த்ரியாணி ஹயாநாஹு:* என்ற உபநிஷத்தின் படியே குதிரைகளாகச் சொல்லப்பட்ட இந்திரியங்களின் வலியையடக்கி ஜிதேந்த்ரியராய் *காமாதிதோஷ ஹரமாத்மபதாச்ரிதாநாம்* என்றும் *மதநகதநைர் நக்லிச்யந்தே யதிச்வரஸம்ச்ரயா:* என்றும் சொல்லும் படி வாழ்ந்தவர்.

12. கம்ஸனால் ஏவப்பட்ட அசுரர்களில் ஓரசுரன் விளாமரத்தின் வடிவமாய், தன் கீழே கண்ணன் வரும்போது மேல்விழுந்து கொல்வதாக எண்ணிவந்து நிற்கவும், மற்றோரசுரன் கண்ணனை முட்டிக் கொல்லும்பொருட்டுக் கன்றின் வடிவங்கொண்டு நிற்கவும் இவற்றை யறிந்த கண்ணபிரான் ''விளவின் காய் கன்றினால் வீழ்த்தவனே'', ''கன்றுகொண்டு விளங்கனி யெறிந்து'' என்கிறபடியே கன்றைச்சுழற்றி விளவின்மீதெறிந்து இரண்டையும் ஒருசேரமுடித்தருளினன் என்றவரலாறு முள்ளைக்கொண்டே முள்ளைக்களைகின்றபடியைக் காட்டுகின்றது. இதுபோலவே ஸ்வாமி ஸ்ரீபாஷ்யகாரர் புறமதங்களைக் கண்டிக்குமிடத்து அவை பரஸ்பர வ்யாஹதங்களாயிருக்கும்படியை நன்கு நிரூபித்துக்காட்டி அவைகளைக்கொண்டே அவற்றை மறுத்தொழிப்பவர்.

13. இடையர்கள் வழக்கப்படி இந்திரனுக்குப் பூஜை செய்யப் பற்பல வண்டிகளில் சோறும், தயிரும், நெய்யும் காய்கறிகளும் சேகரிப்பதைக்கண்டு கண்ணன் அப்பூசனையனைத்தையும் கோவர்த்தனமலைக்கே இடும்படி கட்டளையிட்டுத் தானே ஒரு தேவதா ரூபங்கொண்டு அவற்றை முற்றும் அமுதுசெய்தருள, இந்திரன் பசிக்கோபத்தினால் மேகங்களை ஏவிக் கடூரமான கல்மழையை ஏழு நாள் பெய்விக்க, அதனால் யார்க்கும் யாதொரு தீங்கும் நேரிடாதபடி கண்ணன் அம்மலையையே குடையாக வெடுத்துப்பிடித்து நின்றனன் என்பது ப்ரஸித்தமான கதை. தேவதாந்தரத்திற்கு வழிபாடு செய்வதைப் பொறாத தன்மையும், அந்த வழிபாடுகளை

யெல்லாம் தானே யேற்றுக்கொள்ளுந்தன்மையும், அதனால் எதிரி என்ன தீங்கு செய்ய நினைத்தாலும் அதற்குப் பிரதியாகத் தீங்கிழைக்க நினையாத பெருந்தகவும், தன்னையடுத்தவர்களைத் தான் ரக்ஷித்துக்கொண்டு நிற்றலுமாகிய விஷயங்கள் இவ்விதிஹாஸத்தில் கிடைக்கின்றன. *மறந்தும் புறந்தொழாமாந்தர்* என்றிருக்குமாசிரியர் தேவதாந்தரபஜனத்தைச் சிறிதும்ஸஹியார். ''திருவில்லாத்தேவரைத் தேறேல்மின் தேவு'' என்று துணிந்து உபதேசிப்பர். *ஸாக்ஷாந்நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்யமயீம் தநும், மக்நாநுத்தரதே லோகாந் காருண்யாத் சாஸ்த்ரபாணிநா* என்றும் *பீதகவாடைப் பிரானார் பிரம குருவாகிவந்து* எனறுஞ் சொல்லுகிறபடியே எம்பெருமானே ஆசாரியனாக வந்து பிறந்ததனால் ஆராதனைகளெல்லாம் ஆசார்யனுக்கே சேரும். ''குற்றஞ்செய்தவர்கள் பக்கல் பொறையும் க்ருபையும் சிரிப்பும் உகப்பும் உபகாரஸ்ம்ருதியும் நடக்கவேணும்'' [ஸ்ரீவசனபூஷணம் 365] என்றிருப்பவர் ஆசார்யராகையாலே தீங்கிழைப்பார் திறத்திலும் பிரதியாகத் தீங்கிழைக்க நினையார் பெருமழையில் நின்றும் கண்ணன் காத்தருளினதுபோல *அவிவேக கநாந்த திங்முகே பஹுதா ஸந்ததது:க்கவர்ஷிணி—பவதுர்த்திநே* [ஸ்தோத்ரரத்நம்-49] என்னப்பட்ட பெருமழையில் நின்றும் (அதாவது, ஸம்ஸாரத் துயர்ப் பெருமழையினின்றும்) காத்தருளினர். கண்ணன் ஏழுநாள் காத்தனன். ஆசிரியர் காப்பது ஏழேழ் பிறவிக்கும்.

14 கண்ணன் நப்பின்னைப் பிராட்டியை மணஞ்செய்துகொள்ளுதற்காக, அவளது தந்தை கந்யா சுல்கமாகக் குறித்தபடி அஸுராவேசம்பெற்ற ஏழு எருதுகளை வலியடக்கி அப்பிராட்டியை மணஞ் செய்துகொண்டனன். நம் பரமாசார்யர் ''எட்டிழையாய் மூன்று சரடாயிருப்பதொரு மங்கள ஸூத்ரம் போலே திருமந்த்ரம்'' [முமுக்ஷுப்படி 113] என்கிறபடியே திருமந்த்ரமாகிற திருமங்கலியத்தை சேதநர்களுக்கு கட்டி விவாஹம் நடத்துகைக்கு அங்கமாக, காமம், குரோதம், லோபம், மோஹம், மதம் மாத்ஸர்யம் அஸூயை என்கிற ஏழு விரோதிகளையும் தொலைத்தருளினர்.

15. கண்ணன் இரண்டு மல்லர்களை மடித்ததுபோல ஆசிரியர் *நீர்நுமதென்றிவை வேர்முதல் மாய்த்து* என்கிறபடியே அஹங்கார மமகாரங்களையடியறுத்தவர். கண்ணன் குவலயாபீட மென்கிற மதயானையை முடித்தாப்போலே ''மதக்களிறைந்தினையும் சேரி திரியாமல் செந்நிறீஇ'' என்கிற பொய்கையார் பாசுரத்தின்படியே மதக்களிறாகிய இந்திரியத்தின் துஷ்டத்தன்மையைத் தொலைத்தவர். கண்ணன் மாலாகாரர் திருமாளிகைக் கெழுந்தருளி அவர் தந்த பூவைப்பெற்று உகந்ததுபோல நம் ஆசிரியர் *அஹிம்ஸா ப்ரதமம் புஷ்பம் புஷ்பமிந்த்ரியநிக்ரஹ:, ஸர்வபூததயா புஷ்பம் க்ஷமாபுஷ்பம் விசேஷத:, ஜ்ஞாநம் புஷ்பம் தப:புஷ்பம் த்யாநம்புஷ்பம் ததைவ ச ஸத்யமஷ்டவிதம் புஷ்பம் விஷ்ணோ: ப்ரீதிகரம் பவேத்* என்னப்பட்ட எண்பகர் பூவையும் சிஷ்யர்கள் பக்கலிலே செழித்து வளரக் காணப்பெற்றுக் களித்தமையறிக.

16 கண்ணபிரான் கம்ஸ சிசுபால கௌரவ ப்ரப்ருதிகளை முடித்துப் பஞ்ச பாண்டவாதிகளைப் வாழ்வித்தது போல நம் பரமாசார்யர் *தற்கச் சமணரும் சாக்கியப் பேய்களும் தாழ்சடையோன் சொற்கற்ற சோம்பரும் சூனியவாதரும் நான்மறையும் நிற்கக் குறும்பு செய் நீசரும் மாண்டனரென்னும்படியாக *நாட்டிய நீசச் சமயங்களை மாள்வித்து, அர்த்த பஞ்சகம் முதலிய விசேஷார்த்தங்களை எங்கும் விளங்கச் செய்தனர். இங்ஙனே மற்றும் பலவுங் காண்க.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்

    

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

# பொதுத் தனியன்கள்

### நம்பெருமாள் அருளிச் செய்தது

ஸ்ரீஶைலேசதயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம் |
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம் ||

### கூரத்தாழ்வான் அருளிச்செய்தவை

லக்ஷ்மீநாதஸமாரம்பாம் நாதயாமுந மத்யமாம் |
அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம்பராம் ||

யோநித்யமச்யுத பதாம்புஜ யுக்மருக்ம
வ்யாமோஹதஸ் ததிதராணி த்ருணாய மேநே |
அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைகஸிந்தோ:
ராமாநுஜஸ்ய சரணௌ ஶரணம் ப்ரபத்யே ||

### ஆளவந்தார் அருளிச்செய்தது

மாதா பிதா யுவதயஸ் தநயா விபூதிஸ்
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம் |
ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம்
ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா ||

### ஸ்ரீபராசரபட்டர் அருளிச்செய்தது

பூதம் ஸரஶ்ச மஹதாஹ்வய பட்டநாத
ஸ்ரீபக்திஸார குலசேகர யோகிவாஹாந் |
பக்தாங்க்ரிரேணு பரகால யதீந்த்ரமிஶ்ராந்
ஸ்ரீமத் பராங்குஶமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம் ||

(பொதுத்தனியன்கள் முற்றும்)

ஸ்ரீ:
ஆழ்வார் திருவடிகளே சரணம்

# திருவாய்மொழித் தனியன்கள்

பக்தாம்ருதம் விச்வஜநாநுமோதநம்
ஸர்வார்த்ததம் ஸ்ரீசடகோபவாங்மயம்
ஸஹஸ்ரசாகோபநிஷத்ஸமாகமம்
நமாம்யஹம் த்ராவிட வேதஸாகரம்.

| | | | |
|---|---|---|---|
| பக்த அம்ருதம் | தொண்டர்கட்கு அமுதமாயிருப்பதும் | ஸ்ரீ சடகோப வாங்மயம் | நம்மாழ்வாருடைய ஸ்ரீஸூக்தி மயமுமான |
| விச்வ ஜந அநுமோதநம் | ஸகல ஜனங்களையும் ஆனந்திக்கச் செய்வதும் | த்ராவிட வேத ஸாகரம் | தமிழ் வேதக் கடலை |
| ஸர்வ அர்த்ததம் | ஸமஸ்த புருஷார்த்தங்களையும் அளிக்கவல்லதும் | அஹம் | அடியேன் |
| ஸஹஸ்ர சாகா உபநிஷத் ஸமாகமம் | ஆயிரக்கணக்கான சாகைகளையுடைய உபநிஷத்துக்களின் திரட்சியாயிருப்பதும் | நமாமி | ஸேவிக்கிறேன் |

* * * திருவாய்மொழி ஒரு கடலாக ரூபணம் செய்யப்படுகின்றது. கடலுக்குள்ள தன்மையடங்கலும் திருவாய்மொழிக்கு முண்டென்று ஐந்து விசேஷணங்களினால் நிரூபிக்கப் படுகின்றது. [**பக்தாம்ருதம்.**] உலகிற்காணும் கடலானது பண்டொருகால் *வங்கக் கடல் கடைந்த மாதவனாலே கடையப்பட்டுத் தேவர்கட்கு அமுதமளித்தது ஆகையாலே பக்தர்களான தேவர்கட்கு அது அமுதமாயிருந்தது; திருவாய்மொழியோ வென்னில்; 'தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்'' என்றும் ''பாலேய் தமிழரிசைகாரர் பத்தர் பரவுமாயிரம்'' என்றும் ஆழ்வார் தாமே அருளிச்செய்தபடியே அநந்யப்ரயோஜநர்களான பாகவதர்கட்கு நித்ய போக்யமான அமுதமாயிருக்கும். ''வைகல் பாடவல்லார் வானோர்க்கு ஆராவமுதே'' என்கிறபடியே திருவாய்மொழியைப் பாடுமவர்களே வானோர்க்கு ஆராவமுதமாகும்போது அந்தத் திருவாய்மொழி ஆராவமுதமாகச் சொல்லவேணுமோ?

[**விச்வஜந அநுமோதநம்**] கடலைக் கண்டு களியாத ஜனங்களில்லை யார் எத்தனை தடவை கண்டாலும் ஆராதே அபூர்வ வஸ்துவாகி ஸந்தோஷஜநகமாயிருக்கும் கடல்; திருவாய்மொழிதானும் அப்படியே காணும். ''என்நாவிலின்கவி'' என்றும் ''பாலேய் தமிழரிசைகாரர் பத்தர் பரவுமாயிரம்'' என்றும் ''தூமுதல் பத்தர்க்கு'' என்றும் ''கேட்டாரார் வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லே'' என்றும் ''தென்னாவென்னுமென்னம்மான் திருமாலிருஞ் சோலையானே'' என்றும் ''பார்பரவின்கவி'' என்றும் சொல்லுகிறபடியே ஆழ்வாரோடு மற்றையாரோடு வாசியறவும் நித்ய ஸூரிகளோடு நித்ய ஸம்ஸாரிகளோடு வாசியறவும் ஸர்வேச்வரனோடு தச்சேஷபூதர்களோடு வாசியறவும் எம்பெருமானோடுகூட உபய விபூதியும் புஜிக்கைக்கும் உரியதாகையாலே விச்வசப்தவாச்யரான எம்பெருமானுக்கும் மற்றுமுள்ள ஜனங்களுக்கும் அநுமோதமாயிருக்கும்

[**ஸர்வார்த்ததம்**] கடல் ரத்நாகரமாகையாலே சிறந்த பொருள்களை யெல்லாம் தன்னுள்ளே அடக்கிக்கொண்டிருந்து தன்னிலே அவகாஹித்து எடுத்தாளவல்லவர்கட்குத் தந்து

உபகரிக்கும். திருவாய்மொழி தானும் ஸகல புருஷார்த்தங்களையுமளிக்கும் "குருகூர்ச் சடகோபன் சொன்ன பாடலோராயிரத்துள் இவையு மொருபத்தும் பயிற்ற வல்லார்கட்கு. அவன் நாடு நகரமும் நன்குடன்காண நலனிடையூர்திபண்ணி, வீடும் பெறுத்தித் தன் மூவுல குக்குந் தருமொரு நாயகமே" என்கிறபடியே திருவாய்மொழி அளிக்கமாட்டாத புருஷார்த்த மில்லை யென்க. "மிக்கவேதியர் வேதத்தினுட்பொருள் நிற்கப்பாடி" என்கிறபடியே முமுக்ஷுக்களுக்கு அவசியமறியவேண்டிய வேதாந்த நுட்பொருள்களை யெல்லாம் சுரக்கும் படியைச் சொல்லுகிறதாகவுமாம்.

[ஸ்ரீசடகோப வாங்மயம்] கடலானது ஒருகால் அகஸ்திய மஹாமுனியின் வாயில் நுழைந்து புறப்பட்டதாகையாலே அது அகஸ்த்ய வாங்மயமாயிருக்கும் திருவாய்மொழி குருகூர்ச் சடகோபன் சொல்மாலையாயிருக்கும். 'ஆழ்வாரருளிச்செயல்' என்னுமத்தனையே ஏற்றத்திற்கு உடலென்க. *காயோடு நீடு கனியுண்டு வீசு கடுங்கால் நுகர்ந்து நெடுங்காலம் ஐந்து தீயூடு நின்று தவஞ்செய்த ரிஷிகளிற்காட்டில் * உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையு மெல்லாங் கண்ணனெம்பெருமானென்றே கண்கள் நீர்மல்கிக்கிடந்த ஆழ்வார்க்கு நெடுவாசியுண்டே.

[ஸஹஸ்ரசாகோபநிஷத்ஸமாகமம்] *தொக்கிலங்கியாறெல்லாம் பரந்தோடித் தொடு கடலே புக்கன்றிப் புறம் நிற்கமாட்டாதாகையாலே நதிகள் கடலிலே புகும்போது பலபல மரங்களையும் அடித்துக்கொண்டுபோய்ப் புகுமாகையாலே கடலானது ஆயிரக்கணக்கான சாகைகளின் [கிளைகளின்] சேர்க்கையைப் பெற்றிருக்கும். திருவாய்மொழியோ வென்னில், ஸஹஸ்ரசாகைகளை யுடைத்தான உபநிஷத்துண்டு—ஸாமவேத ஸாரமான சாந்தோக்ய உப நிஷத்து, அத்தோடே ஸமமான ஆகம [வேத]மாக இருக்கும். அனேக சாகைகளையுடையன வான உபநிஷத்துக்களெல்லாம் திரண்ட திரட்சியாயிருக்கும் திருவாய்மொழி என்னவுமாம். ஆக இப்படிப்பட்ட பொருத்தங்களாலும் உள்ளாழமறியக் கூடாமையினாலும் கடல் என்று சொல்லத் தகுந்ததான தமிழ் வேதத்தை நமஸ்கரிக்கிறேனென்றதாயிற்று.

**த்ராவிட வேதஸாகரத்தை அவகாஹிக்கிறேன்** என்னுமல் நமஸ்கரிக்கிறேன் என்றது **"வந்தே ராமாயணார்ணவம்"** [ஸ்ரீராமாயணமாகிற ஸமுத்ரத்தை நமஸ்கரிக்கிறேன்] என்று சொன்னதை அடியொற்றி யென்பர். — — — (*)

**திருவழுதி நாடென்றுந் தென்குருகூ ரென்றும்**
**மருவினிய வண்பொருந லென்றும்—அருமறைகள்**
**அந்தாதி செய்தா னடியிணையே யெப்பொழுதும்**
**சிந்தியாய் நெஞ்சே தெளிந்து.**

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சே | மனமே! | அருமறைகள் | அருமையான வேதங்களை |
| திருவழுதி நாடு என்றும் | திருவழுதி நாடென்கிற தேசத்தை அநுஸந்தித்தும் | அந்தாதி செய்தான் | அந்தாதித் தொடையான திருவாய்மொழி முகத்தாலே பாடின ஆழ்வாருடைய |
| தென்குருகூர் என்றும் | அழகிய திருக்குருகூரென்கிற திவ்ய தேசத்தை அநுஸந்தித்தும் | அடி இணையே | உபய பாதங்களையே |
| | | எப்பொழுதும் | இடைவிடாமல் |
| மருவ இனிய வண்பொருநல் என்றும் | ஆசைப்படும்படி போக்யமாய் அழகியதான தாமிரபர்ணி யாற்றை அநுஸந்தித்தும், | தெளிந்து | தெளிவுடனே |
| | | சிந்தியாய் | சிந்தை செய்யக்கடவை. |

* * * "— ஆழ்வாருடைய திருவடிகளை அநுஸந்திக்கும்போது அவரது திருவவதார ஸ்தலமான திருநகரியையும், அது இருக்கும் நாடாகிய வழுதிவளநாட்டையும், அந்நாட்டுக்த

அலங்காரமாய் ஆழ்வாருக்குப் புராணை நிருபகமுமான தாமிரபரணி திவ்ய நதியையும் அநுஸந்தித்துப் பின்பு 'ஆழ்வார் திருவடிகளே சரணம்' என்னவேணுமென்கிறது. இதனால் உத்தேச்ய வஸ்துவின் ஸம்பந்த ஸம்பந்தம்பெற்ற வஸ்துக்களும் உத்தேச்யம் என்கிற சாஸ்த்ரார்த்தம் வெளியிடப்பட்டதாகும். எம்பெருமானது சேவடியை அநுஸந்திக்குமவர்கள் வைகுந்த வானாட்டையும் * இறந்தால் தங்குமூரான கண்ணன் விண்ணூரையும் * அமுத விரசையாற்றையும் அநுஸந்திக்குமாபோலே.

''வாய்ந்த வழுதிவளநாடன் மன்னு குருகூர்ச் சடகோபன்'' என்றும் ''நல்லார் கவில் குருகூர் நகரான்'' என்றும் ''பொருநற் செங்கணிதுறைவன்'' என்றும் நாட்டையும் ஊரையும் ஆற்றையும் தமக்கு நிருபகமாக ஆழ்வார் தாமே அருளிச்செய்திருக்கையாலே அம்மூன்றையும் அநுஸந்திக்கச் சொல்லிற்று.

தெளிந்து = ஆழ்வார் திருவடிகளே உபாயமும் உபேயமும் என்கிற தெளிந்த அத்யவஸாயங்கொண்டு என்றபடி. ... — ... — (*)

**மனத்தாலும் வாயாலும் வண்குருகூர் பேணும்**
**இனத்தாரை யல்லா திறைஞ்சேன் — தனத்தாலும்**
**ஏதுங் குறைவிலேன் எந்தை சடகோபன்**
**பாதங்கள் யாமுடைய பற்று.**

| | | | |
|---|---|---|---|
| மனத்தாலும் | நெஞ்சினாலும் | ஏதும் குறைவு இலேன் | எவ்விதமான குறையுமுடையேனல்லேன்; (எதனாலென்னில்) |
| வாயாலும் | வாக்கினாலும் | எந்தை சடகோபன் | அஸ்மத் ஸ்வாமியான நம்மாழ்வாருடைய |
| வண் குருகூர் பேணும் | திருநகரியை ஆதரிக்கின்ற | பாதங்கள் | திருவடிகள் |
| இனத்தாரை அல்லாது | கோஷ்டியில்சேர்ந்தவர்களைத் தவிர (மற்றையோர்களை) | யாமுடைய | நம்முடைய |
| இறைஞ்சேன் | வணங்கமாட்டேன்; | பற்று | ஆதாரமாயிராநின்றது |
| தனத்தாலும் | செல்வத்தினாலும் | | |

*** — ஆழ்வார் திருநகரியையே போற்றிக்கொண்டிருக்கும் ஸ்ரீவைஷ்ணவகோஷ்டியில் அந்வயித்த மஹான்களைத்தவிர மற்று எவரையும் வணங்கமாட்டேனென்றது, எப்போதும் அப்படிப்பட்ட ஸ்ரீவைஷ்ணவ சிகாமணிகளையே வணங்குவேனென்றபடி.

மனத்தாலும் வாயாலும் வண்குருகூர் பேணுகையாவது — ''திருக்குருகூரதனை உளங்கொள் ஞானத்து வைம்மின்'' என்றும் ''திருக்குருகூரதனைப் பாடி யாடிப் பரவிச்செல்மின்கள்'' என்றும் ஆழ்வார் உபதேசித்தருளினபடியே திருக்குருகூரை நெஞ்சாலே சிந்தித்தும் வாயாலே சொல்லியும் போருகை. மனமொழிகளிரண்டைச் சொன்னது மூன்றுவதான சரீரத்திற்கும் உபலக்ஷணம் என்று சிலர் கொள்வர். திருநகரியைச் சென்றடைதல் மெய்யினால் பேணுதலாகும். திருக்குருகூரை நெஞ்சினால் நினைந்து வாயில் மொழிதலே போதும். சென்று சேவிக்கவேணுமென்னும் நிர்ப்பந்தமில்லை என்பது இத்தனியனருளிச் செய்தவரின் திருவுள்ளமென்ப. ''பேணுமினத்தாரை'' என்றது, பேணுகிறவர்களின் ஜாதியைச் சேர்ந்தவர்களெல்லாரையும் குறிக்கும்.

ஆழ்வார் திருவடிகளே தமக்குத் தஞ்சமென்றும் அவையே தமக்கு வைத்தமாநிதியென்றும் பின்னடிகளிற் சொல்லுகிறது. ஆழ்வார் திருவடிகளை ஆச்ரயிக்கப்பெற்ற நமக்கு இனியொரு குறையுமில்லையென்கிறார். எம்பெருமானை ஆச்ரயித்தவர்கள் '' நம் மதியம் வத

பாதபங்கஜம்'' என்று அவனது திருவடிகளையே தமக்குச் செல்வமாக நினைத்திருப்பதுபோல ஆழ்வாரை ஆச்ரயித்தவர்கள் ''விபூதிஸ் ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்'' என்று ஆழ்வார் திருவடிகளையே ஸகலைச்வர்யமாக நினைத்திருப்பராகையாலே ''தனத்தாலு மேதுங் குறைவிலேன்'' என்றது.

**எந்தை**-என் தந்தை. முன்னடியில் **இறைஞ்சேன்** என்று ஒருமையாகச் சொல்லிப் பின்னடியில் **யாமுடைய** என்று பன்மையாகச் சொன்னது, இயல்புபற்றிய தனித்தன்மைப் பன்மை; ஸ்வஸம்பந்திகளையுங் கூட்டிக்கொண்டு பேசுகிறு ரென்னவுமாம்... (*)

**ஏய்ந்த பெருங்கீர்த்தி யிராமானுச முனிதன்**
**வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன்—ஆய்ந்தபெருஞ்**
**சீரார் சடகோபன் செந்தமிழ்வேதந்தரிக்கும்**
**பேராத வுள்ளம் பெற.**

| | | | |
|---|---|---|---|
| **ஆய்ந்த** | **குற்றங் கலசாத** | **உள்ளம்** | **நெஞ்சை** |
| **பெரு சீர்** | **சிறந்த திருக்குணங்களினால்** | **பெற** | **பெறும் பொருட்டு** |
| **ஆர்** | **பரிபூர்ணரான** | **ஏய்ந்த பெரு கீர்த்தி இராமா நுச முனிதன்** | **தகுதியான பெரும்புகழை யுடைய எம்பெருமானாரது** |
| **சடகோபன்** | **நம்மாழ்வார் அருளிச்செய்த** | **வாய்ந்த பாதம் மலர்** | **பொருத்தமான திருவடித் தாமரைகளை** |
| **செந்தமிழ் வேதம்** | **செவ்விய தமிழ்வேதத்தை** | **வணங்குகின்றேன்** | **வணங்குகின்றேன்.** |
| **தரிக்கும்** | **தாங்கிக்கொள்ளவல்லதாய்** | | |
| **பேராத** | **வேறொன்றில் செல்லமாட் டாததான** | | |

* * * மேல் தனியனில் ''தமிழ் மறைகளாயிரமும் ஈன்ற முதல்தாய் சடகோபன் மொய்ம்பால் **வளர்த்த இதத்தாய் இராமாநுசன்**'' என்னப்படுதலால் திருவாய்மொழியை வளர்த்தவரான எம்பெருமானாருடைய திருவருளின்றித் திருவாய்மொழியை மனப்பாட மாகத் தரிக்கவல்ல சக்தி வாய்க்கமாட்டாதாதலால், செந்தமிழ் வேதந்தரிக்கும் பேராத வுள்ளம் பெறுதற்காக இராமாநுசனது மலர்ப்பாதம் வணங்குகின்றே னென்கிறது இதில்.

எம்பெருமானார் தாம் *மாறனடி பணிந்துய்ந்த விராமாநுசனாய் *மாறன் பணித்த மறையுணர்ந்தோனாய் *தென்குருகைப்பிரான் பாட்டென்னும் வேதப் பசுந்தமிழ்தன்னைத் தன்பத்தியென்னும் வீட்டின் கண்வைத்த விராமாநுசனாய் *பண்டரு மாறன் பசுந்தமிழ் ஆனந்தம்பாய்மதமாய் விண்டிடும் வேழமாய் *திருவாய்மொழியின் மணந்தரு மின்னிசை மன்னு மிடந்தொறும் புகுந்து நிற்குங் குணந்திகழ் கொண்டலாய் *உறுபெருஞ் செல்வமுந் தந்தையுந் தாயும் உயர் குருவும் வெறிதரு பூமகள் நாதனும் மாறன் விளங்கியசீர் நெறிதருஞ் செந்தமிழாரணமே யென்றிருப்பாராய் (நூற்றந்தாதியில்) ப்ரஸித்தராகையாலே, திருவாய் மொழியைத் தரிக்கும் நெஞ்சு பெறுதற்கு அவரைப் பிரார்த்தித்தல் பொருந்துமென்க இப்படிப்பட்ட அந்தரங்க பக்தராகையாலன்றோ ஆழ்வாரது திருவடிநிலைக்கு **இராமாநுசன்** என்றே திருநாமம் வழங்கி வருவது ஸம்ப்ரதாயமாயிற்று

''எங்கள் கதியே யிராமாநுசமுனியே, சங்கைகெடுத்தாண்ட தவராசா, பொங்குபுகழ் மங்கையர் கோனீந்த மறையாயிரமனைத்தும் தங்குமனம் நீயெனக்குத்தா'' என்ற பெரிய திருமொழித் தனியனையும் இங்கு ஸ்மரிப்பது. ... ... ... (*)

**வான்திகழுஞ் சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல்**
**ஆன்ற தமிழ்மறைகளாயிரமும் – ஈன்ற**
**முதற்றாய் சடகோபன் மொய்ம்பால் வளர்த்த**
**இதத்தா யிராமானுசன்**

| | |
|---|---|
| வான் திகழும் சோலை | ஆகாசத்தளவும் ஓங்கி விளங்கு நின்ற சோலைகளையும் |
| மதிள் | ஸப்த ப்ராகாரங்களையும் உடைத்தான |
| அரங்கர் | திருவரங்கத்தில் பள்ளி கொண்ட எம்பெருமானு டைய |
| வண் புகழ் மேல் ஆன்ற | திருக்கல்யாண குண விஷய மாக அமைந்த |
| தமிழ் மறைகள் ஆயிரமும் | தமிழ் வேதமான ஆயிரம் பாசுரங்களையும் |
| ஈன்ற முதல் தாய் | பெற்ற முக்கியமான மாதா |
| சடகோபன் | நம்மாழ்வாராவர்; |
| மொய்ம்பால் | மிடுக்குடனே |
| வளர்த்த | அதனை வளர்த்த |
| இதம் தாய் | ஹிதமான மாதா |
| இராமாநுசன் | எம்பெருமானாராவர் |

* * *—கீழ்த் தனியனிலே "செந்தமிழ் வேதந்தரிக்கும் பேராதவுள்ளம் பெற—இராமாநுசமுனிதன் வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன்'' என்று பேசும்படி எம்பெருமானார்க்கும் திருவாய்மொழிக்குமுள்ள தொடர்பை வெளியிடுவது இப்பாசுரம். உலகத்தில் ப்ரஜைகளுக்குப் பெற்றதாய் என்றும் வளர்த்தாய் என்றும் இரண்டு தாய்மார் ஏற்படுவதுபோல் திருவாய்மொழியாகிற ப்ரஜைக்கும் இரண்டு தாய்மாருண்டு; அவர்களாகிறார் நம்மாழ்வாரும் எம்பெருமானாரும். ஆழ்வார் பெற்றருளினார். எம்பெருமானார் போஷித்தருளினார். கண்ணபிரானுக்கு தேவகிப்பிராட்டியும் யசோதைப்பிராட்டியும் போல.

ஈன்ற தாய் பெற்றுப் பொகட்டுப்போனால் வளர்க்குந்தாய் தன் மிடுக்காலே காத்து நோக்குமாபோலே எம்பெருமானார் திருவாய்மொழியைக் காத்தருளினவாறு என்னென்னில; ''பிள்ளான் நஞ்சியர் பெரியவாச்சான் பிள்ளை, தெள்ளார் வடக்குத் திருவீதிப்பிள்ளை, மணவாளயோகி திருவாய்மொழியைக்காத்த, குணவாளரென்றுநெஞ்சே கூறு'' என்று உபதேசரத்தினமாலையில் மணவாளமாமுனிகள் அருளிச்செய்தபடியே திருவாய்மொழியைக்காத்த ஆசிரியர் ஐவருள் முதல்வரான திருக்குருகைப்பிரான் பிள்ளானைக் கொண்டு ஆறுயிரப்படி வியாக்கியான மிடுவித்தது எம்பெருமானாரன்றோ. (''தெள்ளாரும் ஞானத்திருக்குருகைப் பிரான் பிள்ளான் **எதிராசர் பேரருளால்**-உள்ளாரும், அன்புடனே மாறன்மறைப்பொருளை யன்றுரைத்தது, இன்பமிகுமாறுயிரம்'' என்ற உபதேசரத்தினமாலை காண்க.) முதன்முதலாகத் திருவாய்மொழியை வளர்த்தவர் எம்பெருமானாரே!யென்க. ''பாஷ்யகாரர் இதுகொண்டு ஸூத்ரவாக்யங்கள் ஒருங்கவிடுவர்'' என்றத முதலான ஆசார்யஹ்ருதய ஸூக்திப்படியே திருவாய்மொழியை யடியொற்றியே எம்பெருமானார்தர்சநத்தின் மஹார்த்தங்கள் யோஜிக்கப்பட்டிருத்தல் முதலான காரண விசேஷங்களும் இங்கு அநுஸந்திக்கவுரியன.

திருவாய்மொழியில் **'கங்குலும் பகலும்'**' என்ற ஒரு திருவாய்மொழி தவிர மற்று ஒரு பாசுரத்திலும் திருவரங்கநாதனுடைய ப்ரஸ்தாவமே இல்லை யாயிருக்க ''மதிளரங்கர் வண்புகழ்மேல் ஆன்ற தமிழ் மறைகளாயிரமும்'' என்று திருவாய்மொழி ஆயிரமும் ஸ்ரீரங்கநாதன் விஷயமாக அருளிச்செய்யப் பட்டதாகப் பேசுகைக்கு அடியென்? என்னில்; நம் பூருவாசாரியர்களனைவரும் நிர்வஹிப்பது இப்படியே; ஆழ்வார் திருவரங்கநாதனுக்கென்றே திருவாய்மொழியாயிரத்தையும் ஸங்கல்பித்து அதிலிருந்து மற்றைத் திருப்பதி யெம்பெருமான்களுக்குப் படியளந்தார் என்றுய்த்து பட்டர் அருளிச்செய்யும்படி; ''திருவேங்கடத்துக்கு

இவைபத்தும்" "வண்திருமோகூர்க்கு ஈத்தபத்திவை" என்றாற்போன்ற 'சொற்போக்கில் இந்த நிர்வாஹம் ஸ்வரஸமாக விளங்குமென்ப.

ஈற்றடியில், ஹிதம் என்னும் வடசொல் இதம் எனத் திரிந்தது. ... ... ... (*)

**மிக்க விறைநிலையும் மெய்யா முயிர்நிலையும்**
**தக்க நெறியுந் தடையாகித்—தொக்கியலும்**
**ஊழ்வினையும் வாழ்வினையு மோதுங் குருகையர்கோன்**
**யாழினிசை வேதத்தியல்.**

| | | | |
|---|---|---|---|
| குருகையர் கோன் | திருநகரியிலுள்ளார்க்குத் தலைவரான ஆழ்வார் (அருளிச் செய்த) | தக்க நெறியும் | ஸ்வரூபாநுரூபமான உபாயத்தின் ஸ்வரூபத்தையும் |
| யாழின் இசை வேதத்து இயல் | வீணாகானம்போன்ற திருவாய்மொழிப் பாசுரங்கள் | தடை ஆகி தொக்கு இயலும் ஊழ் வினையும் | (பகவத்ப்ராப்திக்குப்)பிரதிபந்தகமாகிச் சேர்ந்து கிடக்கிற முன்னை வினைகளாகிற விரோதி ஸ்வரூபத்தையும் |
| மிக்க இறை நிலையும | ஸர்வோத்க்ருஷ்டனான எம்பெருமானுடைய ஸ்வரூபத்தையும் | வாழ்வினையும் | வாழ்வாகிற பரமபுருஷார்த்த ஸ்வரூபத்தையும் |
| மெய்யாம் உயிர் நிலையும் | நித்யனான ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தையும் | ஓதும் | கூறுவன. |

* * * — திருவாய்மொழியிற் சொல்லுகிற அர்த்தங்கள் இன்னவை யென்கிறது இதில் திருமந்திரத்திற் சொல்லுகிற அர்த்தமே திருவாய்மொழியிற் சொல்லப்படுகின்றன: அதாவது அர்த்தபஞ்சகம். ஸகல சாஸ்த்ரங்களுக்கும் ப்ரமேயமாயிருக்கும் அந்த அர்த்தங்கள் இத் தனியனில் அடைவே சொல்லப்படுகின்றன. சேதநர்களால் அடையப்படவேண்டியவனான எம்பெருமானுடைய ஸ்வரூபம், அவ்வெம்பெருமானை அடைகின்ற சேதநர்களின் ஸ்வரூபம், அடைவிக்கின்ற வழியின் ஸ்வரூபம், அடையவொட்டாமல் தடை செய்யுமதான ப்ரதிபந்தகத்தின் ஸ்வரூபம் பிரதிபந்தகம் தொலைந்து பெறக்கடவதான பலத்தின் ஸ்வரூபம் —என்பதே அர்த்தபஞ்சகமாகும்.

எம்பெருமானே ஸர்வஸ்மாத்பரன், ஜீவாத்மா அவ்வெம்பெருமான் பக்கலில் சேஷத்வத்தையே தனக்கு நிருபகமாகவுடையவனாயிருப்பன், சரணாகதியே எம்பெருமானைப் பெறுதற்கு வழி, பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்புமாகிற விவையே பிரதிபந்தகம், ஒழிவில்காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலா வடிமைசெய்வதே பரமபுருஷார்த்தம் என்கிற இவ்வைந்து அர்த்தங்களும் இத் திருவாய்மொழியில் பண்ணிப் பண்ணி யருளிச்செய்யப்படுமாறு காண்க.

**ஸ்ரீகாஞ்சீ அண்ணங்கராசாரியர் ஸ்வாமி இயற்றிய**

**திருவாய்மொழி திவ்யார்த்த தீபிகையில்**

## தனியன் உரை முற்றிற்று

